புறச் செயலற்று இருத்தலின் செய்யுளிற் கூறிய புறச் செயல்கள் நிகழ இடமில்லை. வாழ்வில் என்பதற்கு வாழ்வினைப் பார்க்கிலும் என்று பொருள் கொள்வாருமுண்டு. வேதகம் என்பது விண்ணவர்களிலும் உயர்த்திக் காட்டுந் தனிச் சிறப்பு. உயிர் சிவனோடு இரண்டறக் கலந்த இடத்தே, ஏனைத் தேவரை யெண்ணுமையின், அச்சிறப்புத் தோன்ருதென்க. க

ஒன்றினொடொன்று மோரைந்தி னுடைந்தும் உயிர்ப்பது மாகாதே
 உன்னடி யாரடி யாரடி யோமென உய்ந்தன வாகாதே
கன்றை நினைந்தெழு தாயென வந்த கணக்கது வாகாதே
 காரண மாகும் அனாதி குணங்கள் கருத்துறு மாகாதே
நன்றிது தீதென வந்த நடுக்கம் நடந்தன ஆகாதே
 நாமுமெ லாமடி யாருட னேசெல நண்ணுது மாகாதே
என்றுமென் அன்பு நிறைந்த பராவமு தெய்துவ தாகாதே
 ஏறுடை யான்எனை ஆளுடைநாயகன் என்னுள் புகுந்திடிலே.

**உரை நடை**:—ஈற்றடியை முதலிற் கொள்க.

**உரை**:—காளைவாகனமுடையனாகிய, என்னை அடிமையாகவுடைய தலைவன் என்னறிவினுள் புகுந்து நிலைத்துவிடில், உயிரினோடெம்பும், ஐம்பொறிகளோடு, அவற்றிற்குரிய பொருளாகிய ஐம்புலன்களும் கலந்து நிலைபெறுதல் நிகழாது. உன்னடியார்களுடைய அடியார்க்கடியோ மென்று கூறி உய்தற் கேதுவாய செயல்கள் நிகழமாட்டா. தனது கன்றை நினைந்து (அன்போடு) எழுந்து செல்லுந் தாய்போல உயிர்கள்பாற் கருணை காட்டச் சென்ற முறையும் நிகழாது. மனம் முதலியவற்றிற்குக் காரணமாகும் முக்குணங்கள் அறிவிற் பொருந்துதலு மியலா, இது நல்லதோ, இது தீயதோ என்று ஒன்றினையாய்ந்த காலையேற்படுங் கலக்கம் நிகழ்தலுமியலாது. நாம் எல்லாம் அடியாரோடு உடன்செல்லக் கருதலுமியலாது, என்றைக்குமெனது நிறைந்த அன்பிற்குரிய மேலான அமுதமானவனைப் போயடைதலென்பதும் நிகழாது.

**குறிப்பு**:—ஒன்றினோ டொன்றும் என்பதற்கு உடம்பினொடு பிராணனுமென்று கூறுவாருமுளர். உயிர்ப்பது=கலந்தியங்குவது.

தாயென வந்த என்பதைக் கடவுளுக்கேற்றித் தாய்போலக் குருவாகி வந்ததெனப் பொருள் கொள்வது முண்டு. பராவமுதை யடைந்து விட்டபடியால் எய்தலாகாது என்றார். உ

பந்த விகார குணங்கள் பறிந்து மறிந்திடு மாகாதே
பாவனை யாய கருத்தினில் வந்த பராஅமு தாகாதே
அந்த மிலாத அகண்டமும் நம்முள் அகப்படு மாகாதே
ஆதி முதற்பர மாய பரஞ்சுடர் அண்ணுவ தாகாதே
செந்துவர் வாய்மட வாரிட ரானவை சிந்திடு மாகாதே
சேலன கண்கள் அவன் திருமேனி திளைப்பன ஆகாதே
இந்திர ஞால இடர்ப்பிற வித்துய ரேகுவ தாகாதே
என்னுடை நாயக னாகிய ஈசன் எதிர்ப்படு மாயிடிலே.

**உரை :**—என்னுடைய தலைவனாகிய ஆண்டவன் எதிர் தோன்றிக் கலந்தருளுமாயின், பாசத் தொடர்பான வேற்றுமைப்பட்ட பலவியல்புகள் மறைதலும், மீட்டுத் தோன்றுதலும் நிகழா. கடவுளைப் பாவிப்பதால் உள்ளத்திற் றோன்றிய கற்பனைத் திருவடிவக்காட்சியாவுளதாம், மேலான அமுதமும் அனுபவித்தலாகாது. எல்லையற்ற கட்டுப்படாத வடிவக்காட்சி நமதுள்ளத்தே புலனாதலும் நிகழாது. படைப்பு முதல் உதவிய மேலான சோதிப் பொருளைப் போயடைதல் நிகழாது. செவ்விய பவளவாயையுடைய பெண்டிரால் வரும் இடையூறுகள் ஒழிதல் என்பது நிகழாது, சேல் மீன்போன்ற இறைவனது திருவுருவத்தை நுகர்தலும் நிகழாது. இந்திர கண்கள் சாலம் போல மாயமான இடைஞ்சலான பிறவித்துன்பம் ஒழிதலென்பதும் நிகழாது.

**குறிப்பு :**—இச்செய்யுளுட் கூறியன வெல்லாங் கடவுளோடு இரண்டறக் கலப்பதற்கு முன் நிகழ்வன வென்றும் பின் நிகழா வென்று மறிக. ஆதிமுதற் பரமாய பரஞ்சுடரென்றது ஐந்தொழில் செய்யுந் தடத்த இலக்கணமுடைய கடவுளைக் குறிக்கும். இந்திர ஜாலவித்தையை அறுபத்து நான்கு கலைஞானங்களி லொன்றென்ப. ங

என்னணி யார்முலே ஆகம் அளேந்துடன் இன்புறு மாகாதே
எல்லேயில் மாக்கரு ணேக்கடல் இன்றினி தாடுது மாகாதே
நன்மணி நாதம் முழங்கியென் உள்ளுற நண்ணுவ தாகாதே
நாதன் அணித்திரு நீற்றினே நித்தலும் நண்ணுவ தாகாதே
மன்னிய அன்பரில் என்பணி முந்துற வைகுவ தாகாதே
மாமறை யும்அறி யாமலர்ப் பாதம் வணங்குது மாகாதே
இன்னியற் செங்கழு நீர்மலர் என்தலே எய்துவ தாகாதே
என்னேயுடைப்பெருமான் அருள்ஈசன் எழுந்தருளப்பெறிலே.

உரை :—என்னே அடிமையாகவுடைய பெருமானுகிய கருணே முதல்வன் தோன்றி வீடருளப் பெற்ருல், எனது நகைகள் நிலவிய நகில்கள் அவனது திருமேனியிற் படிந்து இன்புறுதல் நிகழாது. எல்லேயில்லாத பெருங்கருணேக் கடலில் இப்பொழுது நன்கு திளேத்தல் நிகழாது. நல்ல மணியோசை முதலியன என்னுள்ளே மிகுதியாகப் பொருந்தி முழங்குதல் நிகழாது. இறைவனணிகின்றதிரு நீற்றினேப் பூசுதலும் ஏற்படாது. நிலேபெற்ற அன்பருள் எனது பணி விடை முற்பட்டு இருத்தல் நிகழாது. பெருமை பொருந்திய மறை நூல்களறியாத திருவடிக் கமலங்களே வழிபடுதலும் நிகழாது. இனிய இயல்புடைய செங்கழு நீர்ப்பூப் போன்ற திருவடிகள் எனது தலே யிற் பொருந்துதலும் நிகழாது.

குறிப்பு:—இறைவர் திருமேனியைத் தழுவுதல் அவனது திரு வடிவத்தில் ஒடுங்குதலாகும். அது தத்துவச் சார்புடைய தாதலின், தத்துவங் கடந்த அத்துவிதக்கலப்பில் அது நிகழாது என்ருர். திரு அருட்பேறு சிவப்பேற்றிற்கு முற்பட்டதாகலின் சிவப்பேற்றின் பின் அது நிகழாது என்ருர். மணிநாத முழங்குதல் யோகியர் உடம் பில் நிகழ்வது. அது ஞானநிலேயில் நிகழாதென்றனர். ௭

மண்ணினில் மாயை மதித்து வகுத்த மயக்கறு மாகாதே
வானவ ரும்அறி யாமலர்ப் பாதம் வணங்குது மாகாதே
கண்ணிலி காலம் அனேத்திலும் வந்த கலக்கறு மாகாதே
காதல்செ யும்அடி யார்மனம் இன்று களித்திடு மாகாதே

பெண்ணலி ஆணென நாமென வந்த பிணக்கறு மாகாதே
பேரறி யாதஅனேக பவங்கள் பிழைத்தன ஆகாதே
எண்ணிலி யாகிய சித்திகள் வந்தெனை எய்துவ தாகாதே
என்னையுடைப்பெருமான் அருள்ஈசன் எழுந்தருளப்பெறிலே.

உரை :—என்னையுடைய பெருமானாகிய கருணை யாண்டவன், எழுந்தருளப் பெற்றால், மண்ணுலகத்தினில் மாயா காரியங்களைக் கருதி அவற்றின் வகையாக எழுந்த மயக்க வுணர்ச்சி ஒழிதல் என்பது நிகழாது. தேவர்களு மறியாத திருவடிக் கமலங்களை வழிபடுதலும் நிகழாது. ஞானமில்லாதவனாய் இருந்த காலமெல்லாம் ஏற்பட்ட கலக்கங்கள் என்பது நிகழா. பெண் ஆண் அலியெனவும், நாமெனவும் நீரெனவும் பேசவந்த மாறுபாடுகள் ஒழிதல் என்பதும் நிகழாது. பேர்கூடச் சொல்ல முடியாத பல பிறவிகளுள் நின்று தப்பிப் பிழைத்தல் என்பதும் நிகழாது. எண்ணிலடங்காத அற்புதத்திறன்கள் என்னை வந்தடைதல் நிகழாது.

குறிப்பு :—மாயையினாலாகிய மயக்கத்தை முதற்கண் குறிப்பித்தார். அது ஆணவத்தால் வந்த மயக்கின் வேறாகும். கண் = ஞானத்திற் கறிகுறி. கண்ணிலிகாலம் = கண்ணிலியாயிருந்த காலம். கலக்கு - கலக்க மென்பதன் கடைக்குறை. பவங்கள் = பிறவிகள். ரு

பொன்னிய லுந்திரு மேனிவெண் ணீறு பொலிந்திடு மாகாதே
பூமழை மாதவர் கைகள் குவிந்து பொழிந்திடு மாகாதே
மின்னியல் நுண்ணிடை யார்கள் கருத்து வெளிப்படு மாகாதே
வீணை முரன்றெழும் ஓசையில் இன்பம் மிகுத்திடு மாகா[தே
தன்னடி யாரடி என்தலை மீது தழைப்பன ஆகாதே
தானடி யோம்உட னேஉ(ய்)ய வந்து தலைப்படு மாகாதே
இன்னியம் எங்கும் நிறைந்தினி தாக இயம்பிடு மாகாதே
என்னைமுன் ஆளுடைஈசன் என் அத்தன் எழுந்தருளப்பெறிலே.

உரை :—என்னை முன்னாளிலே யாட்கொண்டருளிய முதல்வன் என் அப்பன் எழுந்தருளப் பெற்றால், பொன்னின் தன்மை

யோடு விளங்குந் திருமேனிமீது வெள்ளிய திருநீறு விளங்குதலும் நிகழாது. பெருந் தவத்தினரது கரங்கள் கூப்பி மலர் மழையை இறைவன் திருவடிக்கண் சொரிந்திடுதலும் நிகழாது. மின்னலைப்போல அசையும் நுண்ணிய இடையையுடைய பெண்டிரது உள்ளக் கருத்து வெளிப்படுதலும் நிகழாது. வீணை முழங்கி உண்டாகின்ற இன்னிசையில் இன்பம் மிகுதிப் படுதலும் நிகழாது. இறைவனது அடியார்கள் திருவடிகள் எனது தலைமீது விளங்குதலும் நிகழாது. இறைவன் அடியார்களாகிய நாங்கள் உய்யும்படி எழுந்தருளி வந்து தோன்றுதலும் நிகழாது. இனிய வாத்தியங்கள் எவ்விடத்தும் நிறைந்து இனிதாக ஒலித்தலும் நிகழாது.

குறிப்பு :—பூமழை என்பதை பொலிந்திடு மென்பதனோடு முடிக்க. அடியோம் என்பதை உடனே என்பதோடு முடித்தலு முண்டு. இயம்=வாத்தியம். கூ

சொல்லிய லாதெழு தூமணி யோசை சுவைதரு மாகாதே
துண்ணென என்னுளம் மன்னிய சோதி தொடர்ந்தெழு [மாகாதே
பல்லியல் பாய பரப்பற வந்த பராபர மாகாதே
பண்டறி யாதப ரானுப வங்கள் பரந்தெழு மாகாதே
வில்லியல் நன்னுத லார்மயல் இன்று விளைந்திடு மாகாதே
விண்ணவ ரும்அறியாத விழுப்பொருள் இப்பொருளாகாதே
எல்லையி லாதன எண்குண மானவை எய்திடு மாகாதே
இந்து சிகாமணி எங்களை ஆள எழுந்தரு ளப்பெறிலே.

உரை :—சந்திரனைத் தலையின்கண் மணியாக வைத்த பெருமான், எங்களை யாட்கொள்ள எழுந்தருளப்பெற்றால் சொல்லோசை கலவாது எழுகின்ற பரிசுத்தமான மணிஒலி சுவைபயத்தல் நிகழாது. திடீரென எனதுள்ளத்திற் பொருந்திய சோதியானது தொடர்பாகத் தோன்றுதல் நிகழாது. பல தன்மைகளை உடைய மனவிரிவு கெடும்படி தோன்றிய மிக மேலான பொருள்தோன்றுதல் நிகழாது. முன்பு அறியாத மேலான அனுபவங்கள் விரிந்து மேற்படுதலும் நிகழாது. வில்லின் வடிவுடைய அழகியநெற்றியையுடைய பெண்டி

ரது மயக்கம் இப்போதுபோல் உண்டாதல் இல்லை. வானவரு மறியாத உயர்ந்த பரம்பொருள் விளங்கு மிவ்வடிவோடு தோன்றுதல் நிகழாது. அளவில்லாதனவாகிய இறைவனது எண்குணங்கள் அடைந்திடுதலும் நிகழாது.

**குறிப்பு :**—சொல் கலவாது ஒலிக்கின்ற மணி ஓசையைச் சிலம்பொலி என்பர். அது ஞான யோகத்தால் அறியற்பாலது. துண்ணென மன்னிய சோதி என்றது, ஞானநிலையின் தொடக்கத்திலுண்டாகும் விளக்கத்தை. பரப்பற வந்த பராபர மென்றது மனோலயத்தை உளதாக்கு மிறைவன் திருவடிவம். பரானுபவங்களென்றது, அபரமுத்திப் போகங்கள். இப்பொருளென்றது அடிகளுக்குத் தோன்றிய ஆசிரிய வடிவத்தை. எண்குணங்களை அடைந்து முடிந்த இடமாதலின் புதிதாக எய்திடுதற் கிடமில்லை யென்றார். இந்து சிகாமணி என்பதற்குச் சந்திரனைத் தலையிற் றரித்தவனாகிய மணி போன்றவன் என்றுங் கூறுப. எ

சங்கு திரண்டு முரன்றெழும் ஓசை தழைப்பன ஆகாதே
சாதி விடாத குணங்கள் நம்மோடு சலித்திடு மாகாதே
அங்கிது நன்றிது நன்றெனு மாயை அடங்கிடு மாகாதே
ஆசைஎ லாம்அடி யாரடி யோம்எனும் அத்தனையாகாதே
செங்கயல் ஒண்கண் மடந்தையர் சிந்தை திளைப்பன ஆகா
சீரடி யார்கள் சிவானுபவங்கள் தெரிந்திடு மாகாதே [தே
எங்கும் நிறைந்தமு தூறு பரஞ்சுடர் எய்துவ தாகாதே
ஈறறி யாமறை யோன்எனை ஆள எழுந்தரு ளப்பெறிலே.

**உரை:**—முடிவுணரப்படாத இரகசியப் பொருளாகிய பெருமான் என்னை யாட்கொள்ள எழுந்தருளப்பெற்றால் சங்குகள் பலவொன்று சேர்ந்து முழங்கினாற்போ லெழுவதாகிய ஓசை மிகுதிப்படுதல் நிகழாது. குலங் காரணமாக வருகின்ற குணங்கள் நம்மோடு இயங்குதல் நிகழாது. அவ்விடத்தே இது நல்லது இது நல்லது என்ற மயக்கம் அடங்கி ஒழிதல் நிகழாது. பற்று முழுவதும் இறைவனடியார்க் கடியோம் என்னு மவ்வளவே என்றலுங் கூறவொண்ணாது. சிவந்த

கயல்மீன்போன்ற ஒளியையுடைய கண்ணை உடைய பெண்டிர் மனம் பூரித்தலும் நிகழாது. சிறந்த அடியார்களது சிவானுபவங்களை இன்னதென விசாரித்தலும் நிகழாது. எவ்விடத்தும் நிறைந்து அமுதூறுதற்குக் காரணமாகிய பரஞ்சோதியை யடைதலும் நிகழாது.

குறிப்பு :—சங்கோச யோகானுபவம், சாதிக்குணங்கள் பழக்க மிகுதியால் உண்டாவன. மாயை என்றது புதுமைபற்றிய உணர்ச்சி. அமுதூறு பரஞ்சுட ரென்றது, உடம்பினிற் காணப்படும் உத்தமனை. அ

திருச்சிற்றம்பலம்



தில்லையில் அருளிய

# ஆனந்தமாலை

## சிவானுபவ விருப்பம்

### அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

மின்னே ரனைய பூங்கழல்க ளடைந்தார் கடந்தார் வியனுலகம்
பொன்னே ரனைய மலர்கொண்டு போற்றாநின்றார் அமரரெல்லாங்
கல்நே ரனைய மனக்கடையாய்க் கழிப்புண் டவலக் கடல் வீழ்ந்த
என்னே ரனையேன் இனியுன்னைக் கூடும் வண்ணம் இயம்பாயே.

**உரை :**—மின்னலைப்போன்ற அழகிய இறைவன் திருவடிகளை யடைந்தவர்கள் பெரிய உலகநெறியைக் கடந்தவர்களாவார். தேவர்களெல்லாம் பொன்போன்ற அழகிய மலர்களைத் தூவி இறைவனை வணங்கா நின்றார். கல்லையொத்த மனத்தினவனாய்க் கீழ்ப்பட்டவனாய் அறிஞராற் கழிக்கப்பட்டுக், கவலைக்கடலில் வீழ்ந்த என்னையே போன்ற யான் இனிமேல் உன்னை வந்தடையும் விதத்தைக் கூறியருள்க.

**குறிப்பு :**—பூங்கழல்கள்=பொலி வுடைய திருவடிகள். இழிவில் தனக்குத்தானே நிகரென்பார், என்னேரனைய என்றார். க

என்னால் அறியாப் பதம்தந்தாய் யான தறியா தேகெட்
டேன், உன்னால் ஒன்றுங் குறைவில்லை உடையாய் அடிமைக்
காரென்பேன், பன்னாள் உன்னைப் பணிந்தேத்தும் பழைய
அடிய ரொடுங்கூடா, தென்னா யகமே பிற்பட்டிங் கிருந்
தேன் நோய்க்கு விருந்தாயே.

**உரை :**—என்னாலறிய வொண்ணாத பெருமையுடைய பதவியை நீ தந்தருளினை. யான் அதன் தன்மையறிந்து (பாதுகாவாது)

கெடுதியுற்றேன். உன்னால் யாதொரு குறையு மேற்படவில்லை. நாதனே, அடியேனுக்கு யாரைத் துணையென்பேன். என் தலை வனே, பலநாளாக உன்னை வழிப்பட்டுத் துதிக்கும் பழமையான அன்பர்களோடுஞ்சேராது பின்னிட்டுப் பிணிக்குவிருந்தாக இவ்வுலகி விருப்பேனாயினேன்.

**குறிப்பு :—** என்னுயகமே என்பதை முதலிற் கொள்ளலாம். நோய்க்கு விருந்தா யிருந்தேன் என மாறுக. பதமென்பதற்குத் திருவடியென் று முரைப்பர். நாதனே நீ யடிமைக்கு எவ்வகைத் தொடர்புடையாய் எனவும் பொருள்கொள்வர். உ

சீல மின்றி நோன்பின்றிச் செறிவே யின்றி அறிவின்றித்
தோலின் பாவைக் கூத்தாட்டாய்ச் சுழன் றுவிழுந்துகிடப்பேனை
மாலுங் காட்டி வழிகாட்டி வாரா உலக நெறியேறக்
கோலங் காட்டி ஆண்டானைக் கொடியேன் என்றோ கூடுவதே.

**உரை :—** நல்லொழுக்க மின்றி, விரதமின்றி, அன்பில்லாமல், அறிவில்லாமல், தோற் பதுமையின் கூத்தாட்டத்தைப்போலச் சுற்றி யலைந்து பயனற்று கிடக்கும் எனக்குத் தன்பால் விருப்பங் காட்டி நன்னெறி காட்டிப் பிறவிக்கு மீளாது போய்ச் சேரும் வழியிலே மேற்கொண்டு செல்லுமாறு தனது திருவடிவத்தையுங் காட்டி யாட் கொண்ட பெருமானைக் கொடுமையுடையேன் எந்நாள்போய்ச் சேரு வது ? ங

கெடுவேன் கெடுமா கெடுகின்றேன் கேடி லாதாய் பழி கொண்டாய், படுவேன் படுவ தெல்லாம்நான் பட்டாற் பின் னைப் பயனென்னே, கொடுமா நரகத் தழுந்தாமே காத்தாட் கொள்ளுங் குருமணியே, நடுவாய் நில்லா தொழிந்தக்கால் நன்றோ எங்கள் நாயகமே.

**உரை:—** கெடுதியுறு மியல்புடைய யான் எப்படிக் கெடக் கூடுமோ அப்படிக் கெடுகின்றேன். தீங்கில்லாதவனே (நீ என்னை யாட்கொண்டமையான்) நான் கெடுதலால் வரும் பழியை நீ ஏற்றுக் கொள்ளலாயிற்று. துன்பப்படுதற் குரிய யான் படக்கூடிய துன்ப மெல்லாம் அனுபவித்துவிட்டால் அதற்குப் பின், நீ காப்பதில்

என்ன பயன்? கொடிய பெரு நரகத்திலே ஆழாத வண்ணம் தடுத்தாட் கொள்ளுங் குருவாகிய மாணிக்கமே, எங்கள் தலைவனே, நீ நியாய நிலையிலில்லாமற்போனுல் அது நன்ருகுமா ?

**குறிப்பு** :—பிராரத்துவ வினையை முற்றிலும் அனுபவிப்பதற்கு முன்னேயே வீட்டினைத் தந்தருள வேண்டு மென்பது அடிகள் குறிப்பு. அன்பர் துன்பப்படுங்காலை அதனை நீக்குதல் இறைவர் கடன். அதனைச் செய்யாமை நடுவு நிலைக்கு மாருகுமென்று குறிப் பித்தார். ௬

தாயாய் முலையைத் தருவானே தாரா தொழிந்தாற் சவலையாய், நாயேன் கழிந்து போவேனே நம்பி யினித் தான் நல்குதியே, தாயே யென்றுன் தாளடைந்தேன் தயாநீ என்பா லில்லையே, நாயேன் அடிமை உடனுக ஆண் டாய் நான் தான் வேண்டாவோ.

**உரை**:—தாயாகி வந்து நகிலினின்றும் பொழியும் பாலைத் தரு பவனே(அதாவது தாய் முலையூட்டுதல்போல ஞானப்பாலளிப்பவனே) அதனைத் தராதுபோனுற் பாலின்றி மெலியுங் குழந்தையைப்போல் நாயேன் (அறியாமையினுற்) கழிவாய்ப் போவேனே, அண்ணலே இனியாவது அருள் தருவாயாக. உன்னைத் தாயே யென்றெண்ணி உன்னுடைய திருவடியை யடைந்தேன், நீ என்னிடத்தில் கருணை யில்லாதிருக்கின்ருய். நானுன்னை யடைந்தவுடன் என்னை யடிமை யாக ஆட்கொண்டாய். (இப்போது) அடிமையாகிய நான் உனக்குத் தேவையில்லையோ.

**குறிப்பு** :—தாயாய், சவலையாய் என்பவற்றில் ஆய் என்பதை உவமை யுருவாகக் கொள்ளுதலுமுண்டு. ரு

கோவே யருள வேண்டாவோ கொடியேன் கெடவே அமையுமே, ஆவாவென்னு விடிலென்னை அஞ்சேல் என்பார் ஆரோதான், சாவா ரெல்லாம் என்னளவோ தக்கவாறன் றென்னுரோ, தேவே தில்லை நடமாடி திகைத்தேன் இனித் தான் தேற்ருயே.

உரை:—அரசனே, நீ யருள்புரிய வேண்டியதில்லையா? கொடுமையேன் கெட்டுப்போதலே போதுமா? நீ ஐயோவென் றிரங்காவிடில் அஞ்சாதே யென்றெனக் குரைப்பார் வேறு யார்தான்? பயன்பெறாது இறப்பவர்களெல்லாம் என்னோடு சரியோ, நான் பயன்பெறாது இறந்தால் அது தக்க முறையன்றென்று அன்பர்கள் சொல்லாரோ? கடவுளே தில்லைத் திருக்கூத்தி யற்றுபவனே, யான் திகிலடைந்தேன். இனியாவது நீயே அதனைத் தெளிவிப்பாயாக. சு

நரியைக் குதிரைப் பரியாக்கி ஞாலமெல்லாம் நிகழ்வித்துப், பெரிய தென்னன் மதுரையெல்லாம் பிச்ச தேற்றும் பெருந்துறையாய், அரிய பொருளே அவிநாசி அப்பா பாண்டி வெள்ளமே, தெரிய அரிய பரஞ்சோதீ செய்வ தொன்றும் அறியேனே.

உரை:—நரிகளைக் குதிரை வாகனமாக்கி உலகம் எல்லாம் தெரியும்படி செய்து பாண்டியனது பெரிய ஊராகிய மதுரையிலுள்ளவர்களுக்கெல்லாம் திகைப்பினை மிகுதிப்படுத்துந் திருப்பெருந்துறைப் பெருமானே, பெறுதற்கரிய மெய்ப்பொருளே, அவிநாசி என்னுந் திருப்பதியின்கண் வீற்றிருக்கு மப்பனே, பாண்டியனுன கருணை வெள்ளமே, அறிதற்கரிய மேலான வொளியானவனே, வீடடைதற்குச் செய்யு முபாயமொன்றும் அறிந்திலேனே.

குறிப்பு:—பரி = தாங்குவது என்ற பொருளில் இங்கே வந்தது. பிற இடங்களில் அது குதிரையெனப் பொருள் படும். நிகழ்வித்து = செலுத்தி எனவுங் கொள்ளலாம். பெரிய தென்னன் எனப் பிரித்து பெருமையுடைய பாண்டியனெனவுங் கொள்ப. அவிநாசி என்பது கோயம்புத்தூர் ஜில்லாவிலுள்ளது. சுந்தரமூர்த்திகள் முதலைவாய்ப் பிள்ளை எழுப்பிய இடம். எ

திருச்சிற்றம்பலம்

தில்லையில் அருளிய

# அச்சோப்பதிகம்

---

## அனுபவ வழி அறியாமை

### கலிவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

முத்திநெறி அறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்
பத்திநெறி அறிவித்துப் பழவினைகள் பாறும்வண்ணஞ்
சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனைஆண்ட
அத்தனெனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே.

**உரை :**—வீடடையும் வழியினை யறியாத முரண்பட்டவரோடு சேர்ந்து அவர் நெறி நிற்க முயல்கின்ற எனக்கு அன்பு நெறியை யறிவுறுத்தித், தொல்லை வினைகளற்றொழியும் வண்ணம் மனமாசினை நீக்கிச் சிவமயமாக்கி எனையாட்கொண்டருளிய அப்பன் எனக்கு அருள் செய்த முறையை வேறு யார்பெறவல்லார்? இது அதிசயமே. க

நெறியல்லா நெறிதன்னை நெறியாக நினைவேனைச்
சிறுநெறிகள் சேராமே திருவருளே சேரும்வண்ணம்
குறியொன்றும் இல்லாத கூத்தன்தன் கூத்தையெனக்
கறியும் வண்ணம் அருளியவா றார்பெறுவார் அச்சோவே.

**உரை :**—நன்னெறி யல்லாத வழியை நன்னெறியாக நினையு மியல்புடையேன் கீழ்ப்பட்ட நெறிகளை யடையாது திருவருளினையே கைகூடும்படி, (பெயர் வடிவு முதலிய) அடையாளங்கள் யாவும் இல்லாத திருநடப் பெருமான் தனது திருவருட் கூத்தினை அறியும்படி அடியனுக்கு அருளிச் செய்தவாறு வேறு யார் பெறவல்லவர்? இஃதே அதிசயம். உ

பொய்யெல்லாம் மெய்யென்று புணர்முலையார் போகத்தே
மையலுறக் கடவேனை மாளமே காத்தருளித்
தையலிடங் கொண்டபிரான் தன்கழலே சேரும்வண்ணம்
ஐயன்எனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே.

**உரை :**—நிலையாதனவற்றை நிலையின வென்றெண்ணி நெருங்கிய நகிலையுடைய பெண்டிராது அனுபவத்தின்கண் மயக்க முறுதற்குரிய என்னை (அதனிடை) மாண்டு போகாமற்றடுத் தருள் செய்து, பெண்ணை இடப்பாகங் கொண்ட பெருமானாகிய தலைவன் தன்னுடைய திருவடியையே அடையும் வண்ணம் எனக்கருள் செய்த படி வேறு யார் பெறவல்லவர்? இஃதே அதிசயம். ௩

மண்ணதனிற் பிறந்தெய்த்து மாண்டுவிழக் கடவேனை
எண்ணமிலா அன்பருளி எனையாண்டிட் டென்னையுந்தன்
சுண்ணவெண்நீ றணிவித்துத் தூய்நெறியே சேரும்வண்ணம்
அண்ணல்எனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே.

**உரை :**—மண்ணுலகிற் பிறந்திளைத்துச் செத்து வீழ்தற்குரிய யேனை, நினைப்பதற்கரிய அன்பினைக் கொடுத்து ஆட்கொண்டு, அடியேனையுந் தனது திருவெண்ணீற்றுப் பொடியை அணியச் செய்து புனிதமான உயர் நெறியையே அடையும்படி, பெருமான் எனக் கருளிய முறையை வேறு யார் பெறவல்லார்? இது அதிசயமே.

**குறிப்பு :**—எண்ணமிலா=மனத்தால் எதிர்பாராத என்று முரைப்பர். சுண்ணம்=பொடி. ௪

பஞ்சாய அடிமடவார் கடைக்கண்ணால் இடர்ப்பட்டு
நெஞ்சாய துயர்கூர நிற்பேன்உன் அருள்பெற்றேன்
உய்ஞ்சேன்நான் உடையானே அடியேனை வருகஎன்
றஞ்சேல்என் றருளியவா றார்பெறுவார் அச்சோவே.

**உரை :**—பஞ்சு போன்ற பாதமுை[illegible]ய மாதர் கடைக்கண் பார்வையால் இடைஞ்சற்பட்டு நெஞ்[illegible] உண்டாகிய [illegible]துயர் மிகும்படி நிற்குமியல் புடையே[illegible]உன[illegible]வருளைப்[illegible]றன். நான் உய்ந்தேன்[illegible]டையவ[illegible] அடியே[illegible]

படாதே' என்று அருள் செய்த முறை வேறு யார் பெறவல்லார் இது அதிசயமே. ரு

வெந்துவிழும் உடற்பிறவி மெய்யென்று வினைபெருக்கிக்
கொந்துகுழல் கோல்வளையார் குவிமுலைமேல் வீழ்வேனைப்
பந்தமறுத் தெனையாண்டு பரிசறஎன் துரிசுமறுத்
தந்தமெனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே.

**உரை:**—வெந்து விழும் உடம்பின் சார்பாய பிறப்பை நிலையானதென்றெண்ணித் தீவினைகளை மிகச்செய்து பூங்கொத்துக்களையணிந்த கூந்தலையும் சங்கினாலாய வளையல்களையுமணிந்த பெண்டிரது குவிந்த நகிலின் மேல் விருப்பம் வைக்குமியல்புடைய எனது பாசத்தை நீக்கி, ஆட்கொண்டு, என் உயிர்ப்போதங் கெடும்படி, என் குற்றத்தை யொழித்து முடிவான பேற்றை எனக்கருள் செய்த முறையை வேறு யார் பெறவல்லார்?

**குறிப்பு:**—கொத்து என்பதன் மெலிவு, கொந்து. கோல்=சங்கு. துரிசு=குற்றம். அந்தம் - முடிவான இன்பம். முடிவான நிலை. கூ

தையலார் மையலிலே தாழ்ந்துவிழக் கடவேனைப்
பையவே கொடுபோந்து பாசமெனுந் தாழுருவி
உய்யுநெறி காட்டுவித்திட் டோங்காரத் துட்பொருளை
ஐயன்எனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே.

**உரை:**—பெண்டிர் மயக்கிலே அமிழ்ந்து விழுதற்குரியேனை மெதுவாகக் கொண்டுபோய் மலமாகிய அடிப்படையை உருவி (எறிந்து), உய்தி கூடும் வழியைக் காண்பித்து ஓங்காரத்தின் உண்மைக் கருத்தினை, அப்பன் எனக்கருள்செய்த விதம் வேறு யார் பெறவல்லார்? இது அதிசயமே. எ

சாதல்பிறப் பென்னுந் தடஞ்சுழியில் தடுமாறிக்
காதலின்மிக் கணியிழையார் கலவியிலே விழுவேனை
மாதொருகூ றுடையபிரான் தன்கழலே சேரும்வண்ணம்
ஆதியெனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே.

**உரை:**—அ[illegible]ப்பு இறப்[illegible]ம் [illegible]ய சுழியிலகப்பட்டுத் தடு
மா[illegible] இஃதே[illegible]அ[illegible]து அழகிய [illegible] பு[illegible] [illegible]ச்சியிலே விழு

மியல்புடைய என்னை, உமையொருபாகன் தனது திருவடியே அடையும்படி, (எவற்றிற்கும்) ஆதியாகிய அவன் அருள் செய்தவாறு யார் பெறவல்லார்? இது அதிசயமே. அ

செம்மைநலம் அறியாத சிதடரொடுந் திரிவேனை
மும்மைமலம் அறுவித்து முதலாய முதல்வன்தான்
நம்மையும்ஓர் பொருளாக்கி நாய்சிவிகை ஏற்றுவித்த
அம்மையெனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே.

**உரை:**—எவற்றிற்கும் ஆதியாகிய தலைவன், நேர்மையின் நயம் அறியாத மூடரொடுந்திரியு மியல்புடைய எனது மூவகைப் பாசங்களையுங் களைந்து, (ஒன்றுக்கும் பற்றாத) அடியேங்களையும் ஒரு பொருளாக மதித்து, நாயைச் சிவிகையிலேற்றினாற்போல உயர்வித்த தாய்போல்வான் எனக்கருளிய விதம் வேறு யார் பெறவல்லார்? இது அதிசயமே. கூ

திருச்சிற்றம்பலம்

## திருவாசகம் முற்றிற்று.

ஆகத் திருப்பதிகங்கள் ருக-க்குப் பாடல் தொகை-சுருஅ.



## திருவாசகச் சிறப்பு

தொல்லை யிரும்பிறவிச் சூழுந் தளைநீக்கி
அல்லலறுத் தானந்த மாக்கியதே—எல்லை
மருவா நெறியளிக்கும் வாதவூ ரெங்கோன்
திருவா சகமென்னுந் தேன்.

---

## நால்வர் திருநக்ஷத்திரம்

சித்திரைச் சதயம் அப்பர் சிறந்தவை காசி மூலம்
அத்தரைப் பணிசம் பந்தர் ஆனிமா மகத்தில் அந்த
முத்தமிழ் வாதவூரர் முதியகல் ஆடி தன்னில்
சுத்தமாஞ் சோதிநாளில் சுந்தரர் கயிலை சேர்ந்தார்.

---

## நால்வர் வயசு

அப்பருக்கெண் பத்தொன் றருள்வாத வூரருக்குச்
செப்பிய நாலெட்டில் தெய்வீகம்—இப்புவியில்
சுந்தரர்க்கு மூவாறு தொன்ஞான சம்பந்தர்க்
கந்தம் பதினா றறி.

# சில திருத்தக் குறிப்புக்கள்

[காலந் தாழ்த்துவந்தமையால் கீழ்வரும் குறிப்புக்களை உரிய இடங்களில் சேர்க்க இயலவில்லை.]

இவை, திருவாளர் பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார் அவர்கள், திருவாளர் வேங்கடசாமி நாட்டாரவர்கள் திருத்தக் குறிப்புக்களைத் தழுவிச் சேர்க்கப்பட்டன :—

திருவாசகப் பொழிப்புரை 3-ம் பக்கம் 7-வது அடி பிஞ்ஞகம் - (அன்னை என்பது அஞ்ஞை எனச் சிலப்பதிகாரத்து வந்துள்ளதுபோல) 'பின்னல்' என்பத னடியாகப் பிறந்து 'சடை' என்னும் பொருள்படுமோ என்று நினைக்கிறேன். அதுவே அவனுக்குச் சிறந்த தலைக்கோலமாகலின்.

7-ம் பக்கம் 32-வது அடி—மெய்யேயுன் பொன்னடிகள் கண்டு-உண்மையாகவே நினது திருவடிகளைக் கண்டு எனவும் பொருள் கொள்ளலாம். 'கண்ணார் நுதலாய் கழலிணைகள் கண்டேன் கண்கள் களிகூர' என்பதுபோலப் பலவிடங்களில் வருதலின்.

8-ம் பக்கம் 36-வது அடி—வெய்யாய் தணியாய் - 'தண்ணியல் வெம்மையினன்' என்பது ஆளுடைய நம்பிகள் அருளிப்பாடு.

8-ம் பக்கம் 40 - வது அடி—"அஞ்ஞானம்"—ஐயம், திரிபு, அறியாமை என்னு மூன்றையு மடக்கி அஞ்ஞான மென்றார். இஃது உபலக்கணம்.

15-ம் பக்கம் 85-வது அடி—என்றென்று - தனித்தனிக் கூவிக் கூவி என்று கூட்டிக்கொண்டால் 'ஆற்றேன்' என்னும் ஒருமையுடன் 'மெய்யானார்' என்னும் பன்மை பொருந்திவிடும்.

81-ம் பக்கம் 201-வது அடி—தாளிஅறுகின் - தாளியாகிய அறுகின்.

83-ம் பக்கம் 220-வது அடி—செ[illegible]மாலை - ப[illegible]லை.

83-ம் பக்கம் 225-வ[illegible]அடி-[illegible] - நின்ற[illegible]ஒங்குக.

84-ம் பக்[illegible]அ[illegible]அரும்பி [illegible]எச்சங்கள்

சினைவி[illegible]ாடுபெ[illegible]ருந்தும்.

92-ம் பக்கம் 12-வது பாட்—மண்ணுள்வான் மதித்துமிரேன் - புவியினை ஆளக் கருதியுமிரேன்.

93-ம் பக்கம் 13-வது பாட்—அருளமுதம் - அருளாகிய அமுதம். அத்தமியேன் - அத்தகு தனிமையினேன்.

94-ம் பக்கம் 14-வது பாட்—சாமாறே விரைகின்றேன் சதுராலே - சதுராலே சாமாறு விரைகின்றேன் எனக்கொண்டு இகழ்ச்சிக் குறிப்பாக்கலுமாம். சார்வான் எல்லாப் பொருளும் சார்தற்கு இடமானவன்.

97-ம் பக்கம் 'வேனில் வேள்' என்ற பாட்டினுரையுள் 'பல்வினைய' மென்பதற்குப்பின் 'சிவந்த வாயினைய' மென்பதைச் சேர்த்துக் கொள்க.

108-ம் பக்க—கூத்துடையான் - ஐந்தொழிற் றிருக்கூத்தாடும் முதல்வன்.

114 - வது பக்கம் 6 - வது வரியில் 'அவன்பிரிவினையுண ராமையால்' என்பதற்குப் பதிலாகக் 'காணப் பெறுது வைத்தும்' என்பதையமைத்துக் கொள்க.

119-ம் பக்கம் 49 - வது பாட்டு—பட்டிமண்டபம் - வித்தியா மண்டபமாகும். சிலப்பதிகாரம் இந்திர விழவூரெடுத்த காதை கOஉ-வது அடி - "பகைபுறத்துக் கொடுத்த பட்டிமண்டபமும்" என்பதற்கு அடியார்க்கு நல்லா ருரைத்ததை நோக்குக. பட்டி=நாய் என்று அகராதியி லிருப்பினும் ஆன்றோர் வழக்கிலில்லை.

125-ம் பக்கம் 'தேனைப்பாலை' என்னும் பாட்டின் உரைக் குறிப்பில் 'காண்க' என்பதற்குப்பின் 'உம்பரானை=மேலாய தேவனை என்றுமாம்' என்றதைச் சேர்த்துக் கொள்க.

143 - வது பக்கம் மாறிலாத என்ற பாட்டின் இறுதியடியில் 'நெஞ்சுடைய நாயினேன்' என்பதை, 'நெஞ்சுடையன் ஆயினேன்' எனத்திருத்திக் கொள்க.

146-ம் - பக்கம் 3 - வது 4 - வது வரியுள் 'என்பதற்குவானன்' என்பதை எடுத்[illegible]விட்டு '[illegible]ர்பதன் இறுதி மகரத்திற்கு னகரம்' என்பதை அமை[illegible]க் கொள்க.

'வான[illegible]ம்' என்[illegible]ன்[illegible]ப்பின் இறுதியில் 'வைய[illegible]அ[illegible]சயே' [illegible]பா[illegible]லகினுடைய

கத்[illegible] இஃதே[illegible] [illegible]ன்ப் பொ[illegible] காள்[illegible] கொள்

ளுமிடத்து நைய என்பதற்கு உள்ளம் நைய எனப்பொருள் கொள்க' என்பதைச் சேர்த்துக் கொள்க.

151 - வது பக்கம் அடிக்குறிப்பில் 'கொள்ளப் படும்' என்பதற்குப்பின் 'விடாதி' 'விட்டிடாதி' யென்பன 'விடுதி' 'விட்டிடுதி' யெனத்திரிந்துள்ளன என்பதைச் சேர்க்க.

155 - வது பக்கம் 'தீர்க்கின்ற' என்னும் பாட்டின் உரையில் பயப்படும் படியென்றதற்குப்பின் 'ஒலிக்கின்ற' என்றதைச் சேர்த்துக் கொள்க. எப்பொழுது என்பதற்குப்பின் 'அல்லது எங்ஙனம்' என்பதைச் சேர்த்துக் கொள்க.

158-வது பக்கம் 'களிவந்த' என்ற பாட்டின் உரையுள் 'தந்தையாயினார் தலைவனே' என்பதற்குப் பதிலாக 'எந்தையாகிய பெருமானே' யென்பதை அமைக்க.

160-பக்கம் 'இருந்தென்னை' என்ற பாட்டினுரையுள் 'ஒற்றி வைப்பாய்' என்பதற்குப் பதிலாக 'ஒற்றி வைத்துக் கொள்ளுக' என்பதை அமைக்க.

166-ம் பக்கக் குறிப்பின் முடிவில், கருணாகரன் = கருணைக்கு நிலயமானவன்; ஆகரம் = சுரங்கம்; தொழுகுலம் = தெய்வம் என்பதைச் சேர்க்க.

168 - பக்கத்தில் 'சச்சையனே' என்னும்பாட்டின் உரையுள் 'வெளிப்படையான' என்பதற்குப் பதிலாக 'மிக்க குளிர்ச்சியுடைய, என்பதை அமைத்துக் கொள்க.

169 - ம் பக்கக் குறிப்பின் முடிவில் 'கரிதாய்' எனப் பாடங் கொண்டு கருமை நிறமுடைய என்றும் பொருள் கொள்ளலாம்' என்பதைச் சேர்க்க.

173 - ம் பக்கத்தில் 'வலைத்தலை' என்னும் பாட்டினுரையுள் 'உச்சியாய்' என்பதற்குப் பதிலாக 'யிலிருக்கும் தலைவனே' என்பதை அமைத்துக் கொள்க.

175 - ம் பக்கத்தில் 'மன்னவனே' என்னும் பாட்டினுரையுள் 'இப்படைப்பு முழுதும், என்பதற்குப் ... பதிலாக ... வை எல்லாமும்' என்பதை யமைத்துக் கொள்க ... ர், என்றதற்

182 - ம் பக்கக் ... ப்பி ... ன்பாய் ... ' என்

குப் பின் ... ' ... பொருள் ...

187 - ம் பக்கக் குறிப்பில் ஆழியான் = வஞ்சகன், கள்வன் என்னுஞ் சொற்களை எடுத்து விடுக.

191 - வது பக்க உரையுள் 'ஆடைகள்' என்பதற்குப் பதிலாக 'அணிகலன்கள்' என்று அமைக்க.

192 - ம் பக்கக் குறிப்பில் 'தங்கள்' என்பதற்குத் 'தங்கண்' என்று பாடங்கொள் வாருமுளர் என்றதைச் சேர்க்க.

234 - வது பக்கக் குறிப்பினுள் 'என்றூர்' என்பதற்குப் பின் 'சிவதத்துவம் முதலியவற்றில் இறைவன் அத்துவிதமாய்க் கலந்து அவற்றைத் தோற்றுவித்தலின் இறைவனை அவையேயா யிருப்பதாகக் கூறினூர்' என்பதைச் சேர்த்துக் கொள்க.

235 - ம் பக்கத்தில் 'நோயுற்று' என்னும் பாட்டினுரையுள் 'குளிர்ந்த' என்பதை எடுத்து விடவும்.

237 - ம் பக்கத்தில் கருவாய் என்னும் பாட்டினுரையுள் 'பூப் போன்று' என்பதற்குப் பதிலாகப் 'பூவினையுடைய' என்றமைத்துக் கொள்க.

246 - ம் பக்கம் 'கனவேயும்' என்பதன் பாட்டினுரையுள் வேல் போன்ற என்பதற்குமுன் 'பகைவர் பாற்சினந்து கொல்லும்' என்றதைச் சேர்த்துக் கொண்டு 'பருத்த' என்ற சொல்லை எடுத்து விடுக.

254 - ம் பக்கம் 'தக்கனையும்' என்ற பாட்டினுரையுள் மூன்றூவது வரியில் வந்தவர்களை என்பதற்குப் பின் 'ஒறுத்து ஒழித்தமை' என்பதைச் சேர்த்துக் கொள்க.

287 - ம் பக்கம் 'தீதில்லை' என்ற பாட்டின் குறிப்பில் மாண்புடையவர் என்பதற்குப் பின் பிரமசாரி என்றுங் கொள்க' என்பதைச் சேர்க்க.

292 - ம் பக்கக் குறிப்பில் வேற்கண் என்பதற்குப்பின் 'என்றூர்' என்பதைச் சேர்த்து முற்றுப் புள்ளியிடுக.

306 - ம் பக்கம் 'நீலவுரு' என்னும் பாட்டினுரையுள் 'சாயலுடையதாய என்பதை [illegible] ாயலுடை[illegible]வளாய' என்று திருத்திக் கொள்க.

320 - ம் [illegible] முதல்வா[illegible]யசெ[illegible]ளி என்பதற்குப் பின் உதய மெ[illegible]டி அ[illegible] தயகிரி[illegible] பா[illegible] அதனை எழ[illegible] இஃதே[illegible]நலு முன்[illegible] பன[illegible]

345 - ம் பக்கத்தில் புற்றுமாய், என்னும் பாட்டின் உரையில் 'தன்மைத்தான' என்பதைத் தன்மையனுன' என்று திருத்திக் கொள்க.

346 - ம் பக்க உரையுள் மலை வில்லாமலே என்பதற்குப்பின் 'திருப்பெருந்துறையில் விரும்பியமர்ந்த சிவபெருமானே' என்றதைச் சேர்க்க.

348 - ம் பக்கக் குறிப்பில் 'அதாவது' என்பதற்குப் பதிலாக 'அவரை' என்று திருத்துக.

359 - ம் பக்கக் குறிப்பினிறுதியில் பொல்லல்=பொள்ளல், துளையிடல், என்றதைச் சேர்க்கவும்.

365 - ம் பக்கக் குறிப்பில் 'வைக்கிற' என்பதற்குப் பதிலாக 'வைத்தற்குரிய' என்பதை யமைக்க.

372 - ம் பக்க உரையுள் 'முடியாத' என்பதற்குப்பின் 'தன்னை எனக்குப் பேரின்பம் நுகரத்தந்தருளிய' என்றதைச் சேர்க்க.

387-ம் பக்கக் குறிப்பினிறுதியில் எல்லா வற்றையும் ஒடுக்கிய காலத்தில் ஒடுக்கினமைக்கு அறிகுறியான நீற்றினை இறைவன் அணிந்து விளங்குதலின் நீற்றினை=என்று முள்ளவனேஎன்பதைச் சேர்த்துக் கொள்க.

388-ம் பக்க உரையின் 2 - வது வரியில் "என" என்பதை "என்னும்" என்றும், குறிப்பின் 2 - வது வரியில் "ஞாஞ" என்பதை "ஞான" என்றும், 2 - வது பாட்டின் 3 - வது அடியில் 'திமல' என்றதை "திமில" என்றுந் திருத்திக் கொள்க.

390-ம் பக்க முதல்வரியில் "சுவடிற்கும்" என்பதைச் "சுவட்டிற்கும்" என்று திருத்திக் கொள்க.

397-ம் பக்க பேதமில்ல தோர் என்னுஞ் செய்யுள் உரையில் "அறிவற்றதாய்" என்பதை "அழிவற்றதாய்" என்று திருத்திக் கொள்க.

410 - வது பக்க உரையில் "நீ [illegible] என்பது [illegible] பின் என் ஞெடு அத்து விதமாய் இணைந்து [illegible] பதைச் [illegible] த்துக் கொள்க. குறிப்பினிறுதியில் "அ [illegible] கள் [illegible] என்பதை [illegible] ந்தே அருள் எனமாறுக [illegible] ர்த் [illegible] ாள்க.

412-ம் பக்க மூன்முவது வரியில் “ உடலைக் ” என்பதை “ உடலைச் ” எனத்திருத்திக் கொள்க.

426-ம் பக்கப் ‘ பிணியெலாம் ’ என்னும் பாட்டின் உரையில் “ வளமை ” என்பதை “ வன்மை ” என்று திருத்திக் கொள்க.

428-ம் பக்கத் ‘ தறிசெறி ’ என்னும் பாட்டின் குறிப்பில் “நறும் பூதரிப் பதால் ” என்பதை “ நறும் பூத்தரிப்பதால் ” என்று திருத் திக் கொள்க.

446-ம் பக்கக் ‘ கற்றறியேன் ’ என்ற பாட்டின் மூன்முவது அடியில் “ உற்றிருமாந்து ” என்பதை “ உற்றிறுமாந்து ” எனத் திருத்திக் கொள்க.

455-ம் பக்க ‘ மதிக்கும் திறலுடைய ’ என்னும் பாட்டினுரை யில் “ புகுதற்குரிய ” என்பதை “ புகழ்தற்குரிய ” எனத்திருக் கொள்க.

467-ம் பக்கம் ‘வம்பனுய்த் திரிவேனை’ என்னும் பாட்டினுரையில் ‘ அன்பராயினுர்க்கு ’ என்பதற்குப்பின் “ அருள் புரிந்து உண்மை யடி யார்பால் ” என்பதைச் சேர்த்துக் கொள்க.

484 ம் பக்க 7-வது அடியில் ‘ பெருமை பாராட்டினுல் ’ என் பதற்குப் பதிலாக ‘ தலைசாய்த்தால் ’ என்று அமைத்துக் கொள்க. குறிப்புள் பேழ்கணித்தல் முதல் இறுதி வரையுள்ள பகுதியை எடுத்து விடுக.

497-ம் பக்கம் ‘ ஒன்றினே டொன்று ’ என்ற பாட்டினுரையுள் 4 - வது வரியில் ‘ நிலை பெறுதல் ’ என்பதற்குப் பதிலாக ‘ பின்னெ டுங்குதல் ’ என்பதை அமைத்துக் கொள்க.

498-ம் பக்க உரையுள் 9 - வது வரியில் இடையூறுக ளென் பதற்குப்பின் தோன்றுதல் என்பதைச் சேர்த்துக் கொள்க.

500-ம் பக்க உரை[illegible] 6-வது வரியில் கலக்கங்களென் பதற் குப்பின் ‘ எழு[illegible]ாழித[illegible]ன்பதைச் சேர்த்துக் கொள்க. அந்த வரியில் நிகழ[illegible]ன்பதற்[illegible] இறை[illegible]வன்பால் அன்பு செய்யும் அடியார் கடி அ[illegible] உள்ளத்[illegible] நிகழாது என் [illegible] இஃதே[illegible] கொள்க.

சைவத்திருவாளர் - அ. ம. சரவண முதலியாரவர்கள் அனுப்பியவை :—

102-வது பக்கம் 25-வது பாட்—வண்ணந்தான் அது காட்டி வடிவு காட்டி மலர்க்கழல்கள் அவைகாட்டி - வண்ணம், வடிவு, கழல் என்னு முறை உண்மைக் காட்சியைப் புலப்படுத்துகின்றது. மக்கள் காட்சியில் சேய்மையில் வடிவும், நெருங்க நெருங்க உறுப்பும் அண் மையில் வந்த பின் ஒளி அல்லது நிறமுந் தோன்றும். கடவுள் காட்சி யில் முதலில் ஒளியும் பின்னர் வடிவும் அதன் பின் திருவடி முத லிய உறுப்புங் காணப்படும்.

103-வது பக்கம் 26-வது பாட்—வாக்குன் மணி வார்த்தைக் காக்கி - எனது வாயைத் தேவரீர் விஷயமாகப் பேசும் மாணிக்க வாச கங்கட்கு உரியதாக்கி எனினும் பொருந்தும் - பிறுண்டும் 'மாசில் மணியின் மணிவார்த்தை பேசிப் பிறப்பறுத்தேன்' என்பார்.

104-வது பக்கம் 27-வது பாட்—கிடக்கின்றேனை...கரைகாட்டி யாட்கொண்டாய் மூர்க்கனேற்கே—கரைகாட்டி யாட்கொண்டாய் என்பதை விகுதி பிரித்துக்கூட்டிக் கிடக்கின்றேனை ஆட்கொண்டு, மூர்க்கனேற்குக் கரைகாட்டினுய் என இயைக்க. கிடக்கின்றேனை என்னும் வினையாலணையும் பெயர் கிடந்த என்ற பொருளில் வரு வ'து அரிது. 'ஐ'யைச் சாரியை யாகவும் கொள்ளலாம்.

114-வது பக்கம் 40-வது பாட்—தயிராகி...போகேன்...உண் டுடுத் திருந்தேனே—நேர் முறையிலேயே பொருள் கொள்ளலாம்— தயிராகிப் போகேன்...ஊனில் ஆவியை ஓம்ப உண்டு உடுத்து இன்னமிருந்தேன் என வினைமுடிவு செய்க. 'போகேன்' என்பதை முற்றெச்சமாகப் பொருள் கொள்க.

115-வது பக்கம் 41-வது பாட்—யானையை ஒத்திருந்து—ஒத் திருந்து கண்டிலேன் எனக் கூட்டி, யானை தன்னை (=தனது உடலை) அறியாததுபோல யான் உள்ளக் கருவைக் கண்டிலேன் என வும் பொருள் கொள்ளலாம்.

115-வது பக்கம் 41-வது பா[illegible]—கிற்றி[illegible]ன் கிற்பன் உண் ணவே—வருதற்குக் கிற்றிலேன், [illegible]ல் உண்[illegible]க்குக் கிற்பேன் - உணவை என்றே பொ[illegible]கொ[illegible]ம். மேற்[illegible]லும் உண்டுடுத் திருந்தே[illegible]

118-வது பக்கம் 47-வது பாட்—அஃதிலான்—அத்தொடர்பிலான் எனப் பொருளுரைப்பின் திணையும் எண்ணும் வழுவாதவில்லை.

120-வது பக்கம் 50-வது பாட்—ஆண்டநாள் அறிவனே அல்லனே—தேவரீர் ஆண்ட பின்னர் யான் அறிஞனே மூடனே எனவுங் கொள்ளலாம்.

142-வது பக்கம் 90-வது பாட்—என் அன்பும் பொய்—என் அன்பும் பொய்யானல் வினையேன் பொய்யாக அழுதால் உன்னை அடைதல் கூடுமோ? எனக் கொள்ளலுமொன்று.

146-வது பக்கம் 95-வது பாட்—ஆடுவித்தவா...நைய...இச்சையே—ஆடுவித்தவாறும் இச்சை நையவே (நைதற்பொருட்டே) எனவும் கொள்ளலாம்.

148-வது பக்கம் 98-வது பாட்—துப்பனே-நுகர்ச்சிப் பொருளாயுள்ளவனே என்றுங் கொள்ளலாம்.

149-வது பக்கம் 99-வது பாட்—பன்ன...என்எனை...பாடவே - 'பன்னவும் பாடவும் வருகவென் எனை' என்றுங் கூட்டலாம்.

166-வது பக்கம் 29-வது பாட்—குலங்களைந்தாய் களைந்தாய் என்னைக் குற்றம் - எனது குலப்பற்றை முன்னர்க் களைந்து பின்னர் எனைய குற்றங்களைக் களைந்தாய் எனக் கூறுதலமையும். குல நினைவு வீடு பேற்றுக்கு ஒரு பெருந்தடை யென்பது திருநாளைப்போவாரை இறைவன் நெருப்பில் இறங்குமாறு செய்து அந்நினைவைப் போக்கி வீடு அருளியமையால் நன்கு புலனுவ தொன்று. பிருண்டும் அடிகள் "சாதிகுலம் பிறப்பென்னும் சுழி" எனக்கூறுதல்காண்க.

168-வது பக்கம் 32-வது பாட்—கடற்கரிதா யெழுநஞ்சு - கடலின்கண் கரிதாய் எழும் நஞ்சு எனவுங் கொள்ளலாம்.

169-வது பக்கம் 33-வது பாட்—கண்டது செய்து...மிண்டுகின்றேனை - "கருணைமட்டுப் பருகிக் களித்தும் கண்டது செய்து மிண்டுகின்றேனை" என்று கொண்டு கூட்டி, தேவரீர் ஆட்கொண்டஞான்று கருணை [illegible] தேனைப் [illegible]பருகி மகிழ்ந்தும், அருள்வழிச் செல்லாது கண்டது [illegible] து திரி[illegible]லென்னை விட்டுவிடாதே, முன்போல் இன்னொரு [illegible] அ[illegible]ட்கொ[illegible] [illegible]க் [illegible]ளின் நன்கு பொருந்தும். [illegible] இஃதே[illegible]

172-வது பக்கம் 37-வது பாட்—திரைசேர்மடந்தை - கங்கா தேவி எனப் பொருள்கொளல் நேரிது.

175-வது பக்கம் 44-வது பாட்—தொழுது செல்வான் - வணங்கிச் செல்வதற்கு எனப் பொருள் கோடலே அமையும்.

177-வது பக்கம் 47-வது பாட்—வெண்மணிப் பணிலம்......பந்தப் பெருமை—உம்மைத் தொகையில் வல்லினம் மிகாதாகலின் முத்தைத் தருகிற சங்கு, அழகின் பெருமை எனக் கோடலே யமையும்.

180-வது பக்கம் 1-வது பாட்—ஏதேனும் ஆகாள் கிடந்தாள்—ஆகாள் என்பதை முற்றெச்சமாக்கி ஆகாமற் கிடந்தாள் எனக்கொண்டு 'நின் செவிதான்' என்பதுவரை தூங்கியவளை முன்னிலைப் படுத்தியதாகவும் பின்னர்த் தன்னோடு இருந்தவர்களை முன்னிலைப்படுத்திக் கூறியதாகவும் கொள்ளலாம். அன்றேல், தனக்குள் எண்ணியதாகவும் கொள்ளலாம்.

181-வது பக்கம் 2-வது பாட்—பாசம் பரஞ்சோதி...... அமளிக்கே—"இரவும் பகலும் நாம் பேசும்போதெல்லாம் பாசம் பரஞ்சோதிக் கென்பாய், இப்போது போதார் அமளிக்கே நேசமும் வைத்தனையோ" என்றும் கொள்ளலாம்.

181-வது பக்கம் 2-வது பாட்—ஈசனார்க் கன்பார் யாம் ஆர்—"அன்பு நிறைந்த யாம் எத்தன்மையோம், அரனடியில் அயரா அன்பினையுடைய யாம் அங்ஙனம் செல்வேமா" எனக் கொள்ளின் திணை வழுவமைதி வேண்டுவதில்லை.

182-வது பக்கம் 3-வது பாட்—பத்துடையீர்......இத்தனையும் வேண்டும் எமக்கு—பத்துடையீர் முதலிய சொற்களைக் கேட்டு எழுப்ப வந்தவர்கள் அவற்றைத் தம்மை எள்ளனஞ் செய்யக் கூறிய வையாகக்கொண்டு சித்தமழகியார் பாடாரோ எனக் கூறி நின்னை எழுப்ப வந்த எங்கட்கு இத்துணை அவமதிப்பும் வேண்டியதே எனக் கோடலும் அமையும்.

183-வது பக்கம் 4-வது பாட் [illegible] காடுள்ளவா..... எம்பாவாய் - எண்ணிக் கொடுள்ளவா [illegible] ஆனல் அத் துணை நேரம் வரை இ[illegible] மக்கு இயலா மற் போய்[illegible] த்தைப்

போக்காமல் நீயே வந்து எண்ணிக் குறையிற்றுயில் ஏல் எனக் கோடலும் அமையும்.

190-வது பக்கம் 12-வது பாட்—வார்கலைகள் ஆர்ப்பரவஞ் செய்ய—ஆடையில் ஒலியெழுதலின்மையால் மேகலைகள் என்ற அணிகள் என்றே பொருள்கோடல் அமையும்.

191-ம் பக்கம் 13-வது பாட்—பைங்குவளை......அரவத்தால் - குவளை, தாமரை முறையே அம்மைக்கும் அப்பனுக்கும் ஆனமை போல, குருகு, அரவம் முறையே ஆகுமெனக் கோடலே அமையும். இன்றேல் வலிந்து பொருள்கோடலும் உமாதேவிக்குப் பாம்பணி கூறலும் நேரும்.

209-ம் பக்கம் 14-வது பாட்—பிறவாய்......ஒட்டுகக்து - பிறவு - பிறப்பு, தொழிற்பெயர். ஒட்டு - முதனிலைத் தொழிற்பெயர்.

214-ம் பக்கம் 1-ம் பாட்—இசைமின் - இஃது ஏவற்பன்மையாகலின் இதனைப் பாடுவாராக எனப் படர்க்கையில் வைத்துப் பொருள்கோடல் பொருந்தாது.

218-ம் பக்கம் 6-வது பாட்—உலக்கைபல......வந்து நின்றார் - உலகமனைத்தும் உரலாயினும் போதாதெனச் சொல்லுமாறு பல உலக்கைகளை வரவிடுவார் பெரியார். உலகங்கள் இடம்போதா எனச் சொல்லுமாறு காணப் பலவடியார்கள் வந்து நின்றார்.

221-ம் பக்கம் 10-வது பாட்—செங்கயற் கண்பனி - மீன் போன்ற கண்களில் நீர்.

221-ம் பக்கம் 11-வது பாட்—பாடுமின்........வண்ணமும் - ஆண்டவாறும் வண்ணமும் வாய்திறந்து பாடுமின் எனமுடிக்க.

223-ம் பக்கம் 13-வது பாட்—எம்பெருமான் இமவான் மகட்குத், தன்னுடைக் கேள்வன் மகன் தகப்பன் தமையன்—“வாயுமன முங்கடந்த மனோன்மணி, பேயுங்கணமும் பெரிதுடைப் பெண்பிள்ளை, ஆயுமறிவுங் கடந்தஅரனுக்குத், தாயுமகளுநற் றாரமுமாமே” (திருமந்திரம்), “க[illegible] “[illegible] கவின்செய் மன்றினில், அனகநாடகற் கெம் மன்னை, [illegible]ளத்த [illegible]ங்கை மகள்” (குமரகுருபரர்) என்ற வாக்குகளை [illegible]க்து வதத்து[illegible]க [illegible]நீறலையுந் தடந்தோ ளண்ணல் தன்னொருபா[illegible]டி அ[illegible]ட்கெ[illegible] தி[illegible]டி[illegible]பான்.” என்னும் திருக் கோ[illegible]: இஃதே[illegible] [illegible] [illegible]ந் தோன்ற

வின் அவளத்தனு மென்றும், சத்தி தத்துவத்தினின்றுஞ் சிவதத்துவம் தோன்றலின் மகனுமென்றுங் கூறினர். இமவான்மகட்குத் தன்னுடைக் கேள்வன்மகன் தகப்பன் தமையன் என்பதும் அப்பொருண்மேற்று வந்தது என்னும் பேராசிரியருரையும் ஈண்டு உன்னற் குரியன.

225-ம் பக்கம் 16-வது பாட்—ஆவகை.........வண்ணங்கள்பாடி- உய்யுமாறு நாமும் அன்பரோடு வந்து அடிமைசெய்யுந் திறங்களைப் பாடி எனக்கோடலே யமையும்.

226-ம் பக்கம் 17-வது பாட்—உய்யஅன்று - அன்று எனுஞ் சொல் எதிர்காலத்திலும் வருவதை "அன்றறிவா மென்னு தறஞ் செய்க" என்னும் திருக்குறளா னுணர்க.

227-ம் பக்கம் 19-ம் பாட்—கவித்தகைம்மேல் இட்டு நின்றுடும் அரவம் - திருக்கூத்தனது கவித்த (இடது) திருக்கரத்தில் இடப்பட்டு படமெடுத்து நின்றுடும் அரவம்.

233-வது பக்கம் ௬-வது பாட்—குலங் கல்வியென்னும் பித்த உலகு...இறப்பென்னுஞ் சித்தவிகாரம்—"என்னும்" இரண்டடிகளிலும் வருதலால் கல்விவரையிலுள்ளவற்றைப் பித்த வுலகிற்கு அடையாகவும் பிறப்பிறப்பு என்பவற்றைச் சித்த விகாரத்துக்கு அடையாகவும் கொள்ளுதலமையும்.

235-வது பக்கம் 10-வது பாட்—யானிங்கிருந்து செல்வம் நயந்தறியா வண்ணம் எல்லாவற்றுனும் தாய்போன்று வந்து ஆண்டுகொண்ட என முடிக்கலாம்.

236-வது பக்கம் 13-வது பாட்—ஆனகருணையும் அங்குற்றே தான் - அவனிடம் என் பொருட்டுண்டான கருணையும் அங்குமிகுந்தனுற்றுன் (என் தகுதியன்று, அவன் பெருங்கருணைதான்) என்றபடி.

237-வது பக்கம் 15-வது பாட்—ஆண்டிலனேல் - ஆண்பாலும் பெண்பாலும் விரவி சிறப்பினுல் ஆண்டிலன் என ஆண்பால் முடிபைப் பெற்றன.

238-வது பக்கம் 17-வது பாட் [illegible] ன் - என்று என்னுல் துதிக்கப்பெறும் அ[illegible] [illegible]துன்றேல், செல்வத்தில் அழுந்திக் [illegible] வினையாகிவிடும்.

240-வது பக்கம் 20-வது பாட்—இறுமாக்க - வீடு ஊர்த்துவ முகமும் பிறப்பு அதோ முகமும் ஆதலின் இறுமாக்க என்பதற்கு வீடடைய எனப் பொருள் கொள்ளலாம். இதனை "என்றும் வீடடைந்தவர்" எனத் தொடங்கும் வைராக்கிய சதகச் செய்யுளாலும் அதற்குச் சிதம்பர சுவாமிகள் எழுதிய அரிய உரையாலும் அறியலாம்.

243-வது பக்கம் 5-வது பாட்—உருவந்து...கொண்டருளி - பூதலத்து ஓர் உரு வந்து யான் உகப்பெய்த என்னை ஆட்கொண்டருளி எனவும் இயைக்கலாம்.

245-வது பக்கம் 8-வது பாட்—மறந்தே யுந்தன் கழல் நான் மறவாவண்ணம் - அதனை மறந்தும் செய்யேன் யான் என்பதுபோல இத்தொடர் அமைந்திருக்கிறது. மறந்தும் பிறன் கேடு சூழற்க, வழுக்கியும் வாயாற் சொலல் என்பவற்றை நோக்குக.

246-வது பக்கம் 10-வது பாட்—சினவேல் - உடையான் சினத்தை உடைமை மேலேற்றியது உபசாரம்.

247-வது பக்கம் 12-வது பாட்—பத்திக் கடலுட்பதித்த - பத்திக் கடலுட்டன்னைப் பதித்த எனவும் கொள்ளலாம்.

256-ம் பக்கம் 9-வது பாட்—எய்திவீடுவர் - இதை விகுதி பிரித்துக்கூட்டி யோகத்தால் உடலை விட்டு விண்ணுலகத்தை யடைவர் எனப் பொருள்கோடலே பொருந்தும். விண்ணையடைய இறப்பார் என்பது அமைதலரிது.

267-ம் பக்கம் 6-வது பாட்—எரிமூன்று தேவர்க்கிரங்கி......சிரமூன்றற......எரிகின்ற சோமசூரி யாக்கினி என்னு மூன்று தேவர் கட்கும் இரங்கி அவர்கள் ஒளிப்பொருள்க ளாமாறு அருளி-("மெய்ச் சுடருக் கெல்லாம் ஒளிவந்த பூங்கழ லுத்தரகோச மங்கைக் கரசே" என்றார் பிறண்டும்.) சிரமூன்றற - தக்கன், எச்சன், பிரமன் இம் மூவர் தலை. இதனை என[illegible] தேவர் [illegible]ற்றலையு மெச்சனவன்றலையுந் தாமரை நான் முகன்றலை[illegible]று [illegible]த்தார் [illegible]டருள ஒண்டிருப் புருவம் நெரித்தருளிய வுருத்திர[illegible]க் து[illegible] [illegible]மாளிகைத் தேவர் திருவிசைப் பாவா லறிக. [illegible]டி அ[illegible]ட்டெக[illegible] [illegible]ன்[illegible]ரங்கொய்து மூன்றுருவமாகி [illegible] இஃதேற்[illegible] [illegible]ர்க.

293-ம் பக்கம் 3-வது பாட்—தன்கருணை வெள்ளத்து மன்னூற மன்னும் - தன்கருணைப் பெருக்கோடு பெருமை சுரக்க நிலைபெற்ற என இயைக்க. ஊன்ற என்னும் பெயரெச்சம் ஊற என இடைகுறையாது. குறையின் வினையெச்சமாதல் காண்க.

305-ம் பக்கம் 1-வது பாட்—இறைவன் மனவாக்கிற் கெட்டாதவனாயினும் இசைப் பிரியனாதலின் நின் இன்னிசையைக் கேட்டவளவில் வருவானென அடிகள் அருளுகின்றார்.

314-ம் பக்கம் 4-வது பாட்—செய்யவாய்ப் பைஞ்சிறகிற் செல்வீ - (செல்+வீ - பறந்து செல்கின்ற கிளியே—வீ=பறவை, செய்ய வாயும், பைஞ்சிறகு முடைமையான் ஈண்டு கிளியை உணர்த்திற்று.)

331-ம் பக்கம் 7-வது பாட்—இரங்கும் நமக்கம் பலக்கூத்தன் - இரங்கு எனவேகொண்டு அம்பலக்கூத்தன் என்பதை அண்மைவிளியாகக் கொண்டு 'நீ' என்னு மெழுவாயை வருவித்துரைப்பின் இடமயக்கம் ஏற்படாது.

357-ம் பக்கம் 10-வது பாட்—வழங்குகின்றாய்க்குன் அருளாரமுதத்தை வாரிக்கொண்டு, விழுங்குகின்றேன் - உன் அருளாரமுதத்தை வழங்குகின்றாய்க்கு - வழங்குகின்ற நின்பொருட்டு எனப் பொருள் கொள்க. விளையாட்டு நினைவில் இருக்குங் குழந்தைக்குத் தாய் வலிந்து உணவூட்டுங்கால் அது அத்தாயின் பொருட்டு உண்ணுமேயன்றித் தன்பொருட்டெடன வெண்ணி யுண்ணாது. அதுபோல இக்கருத்து முன்னும் பின்னுமுள்ள பாக்களா லறியப்படும்.

361-வது பக்கம் 5-வது பாட்—புளியம்பழமொத்திருந்தேன் - புளியம்பழம் உள்ளே கசிவு முதலிய உடைத்தாயிருப்பினும் புறத்தே திண்ணிய தோல் மூடியிருத்தலளவிலே உவமையாகக் கொள்ளினுமாம்.

363-வது பக்கம் 8-வது பாட்—தலைமேல் வைத்து என்பது வரை உடற்றொண்டு, அறற்றி என்பதுவரை உரைத்தொண்டு, அழல்சேர் மெழுகொப்ப ஆசைப்படல் (=உருகுதல்) உளத்தொண்டு, எனவே முத்தொண்டும் செய்ய விரும்பி[illegible]னன் எ[illegible]றபடி.

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# பாட்டு முதற்குறிப்பகராதி